[28th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : தொழிற்சாலைகளில் வேலை செய்கின்ற தொழிலாளர்களுடைய சௌகரியத்திற்காக சங்கு ஊதுகிறார்கள். அதை ஊர் முழுவதிற்கும் ஊதுமாறு கேட்டுக்கொள்வது சரியல்ல. அதற்கு முயற்சி செய்வதிலும் பயன் இல்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : சில இடங்களில் அதாவது நகரசபைகளில் இந்த ஒலி எழுப்புவதின் காரணமாக, பக்கத்தில் இருக்கக்கூடிய ஆசுபத்திரிகளில் இருக்கக்கூடிய நோயாளிகளுக்கு (பேஷிண்ட்) தொந்தரவு ஏற்படுகிறது என்று சொல்வதை நான் கேள்விபட்டிருக்கிறேன். ஆகவே மைசூர் போன்ற இடங்களில் ஏற்பாடு செய்திருப்பது போன்று அரை செக்கண்ட், அல்லது ஒரு செக்கண்ட் (லைட்டை) விளக்கை அணைத்து ஏற்றுவது என்கிற முறையை ஏற்படுத்த முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றியும் யோசனை செய்து பார்க்கலாம். ஆனால் "வீக்"-காக இருக்கும் பல்புகள், இதனால் ப்யூஸாகி விடும். எல்லாவற்றையும் யோசித்துப்பார்க்கலாம்.

SRI A. A. RASHEED : கடியாரம் பார்க்கத் தெரியாத ஆள்களின் நன்மையைக் கருதியாவது இந்த "டைம்-கன்" முறையை சர்க்கார் ஏற்படுத்துமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கடிகாரம் பார்க்கத் தெரியாதவர்களுக்கு இதன் மூலமும் நேரத்தை அறிந்துகொள்ள முடியாது.

SRI A. VEDARATHNAM : நம்முடைய கிராமங்களில் படிக்கத் தெரிந்தவர்களை விட படிக்கத் தெரியாதவர்கள்தான் அதிகமாக இருக்கிறார்கள். அவர்கள் சரியான நேரத்தில் வேலைக்குப் போகக்கூடிய அளவில், நேரத்தை குறிப்பிடுவதற்கு ஏதாவது அறிகுறி ஏற்படுத்தப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நாம் சென்னை நகரத்தைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம். கிராமங்களைப்பற்றி அல்ல.

*Beggar problem*

* 1148 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பிச்சைக்காரர்கள் ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்து வருவது உண்மையா ?

(இ) அப்படியானால் அதற்கான காரணங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No year-wise census is taken to find out the number of beggars in this State.

(*b*) Does not arise.

*Bug nuisance*

* 1149 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மலேரியா ஒழிப்புக்கு D.D.T. அடித்ததின் காரணமாக மூட்டைப் பூச்சிகள் அதிகமாயுள்ளது என்பது உண்மையா ?

(இ) அப்படியானால் அதைப்போக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

28th March 1961]

SRI S. M. ANNAMALAI : ஸார், நான் வட ஆற்காடு ஜில்லா டெவலப்மெண்ட் கவுன்சில் கூட்டத்தில் டி.எம்.ஒ. அவர்களிடத்தில் இதைப் பற்றி கேட்டதற்கு, . . . D.D.T. அடிப்பதின் காரணமாக மூட்டைப்பூச்சிகள் அதிகமாகி விட்டன. இதைத் தொலைப்பதற்கு மருந்து வாங்க இப்போது சர்க்காரிடத்தில் பணம் இல்லை. சர்க்கார் பணம் தருவதாக இருந்தால் இந்த மருந்தை வாங்கலாம் என்று சொன்னார்கள். ஆனால் அமைச்சர் அவர்கள் சொல்லுவது வேறுவிதமாக இருக்கிறது. ஆகவே அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி மறு பரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி நன்றாக பரிசிலனை பண்ணித்தான் சொல்லுகிறேன். மலேரியா ஒழிப்புத்திட்டத்தின் கீழ் கொசுக்களை ஒழிப்பதற்காக D.D.T. அடிக்கப்படுகிறது. அப்போது மலேரியாவுக்கு காரணமாய் இருக்கின்ற கொசு செத்துப்போய் விடுகிறது. அதோடு மூட்டைப்பூச்சி, பேன் முதலியவைகளும் செத்துக்கொண்டிருந்தன. இப்போது D.D.T. அடிக்கும்போது மூட்டைப்பூச்சிகள் (இம்யூன்) ஆகி திரும்பவும் சாகாமல் வந்துவிடுகிறது. முன்னால் சௌகரியமாய் இருந்தது, மூட்டைப்பூச்சிகள் எல்லாம் செத்துக்கொண்டிருந்ததினால், இப்போது அப்படி இல்லாததால் அசௌகரியம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள்.

SRIMATHI HEMALATHA DEVI : தலைவர் அவர்களே, கொசுக்களை ஒழிப்பதற்கு மருந்துகள் அடிக்கும்போது மூட்டைப்பூச்சிகளையும் ஒழிப்பதற்கு மருந்து அடிக்கப்படுகிறது என்பது உண்மையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவ்விதம்தான் மருந்து அடிக்கப்பட்டது. அதில் நல்ல பலனும் இருந்தது. இப்போது அந்த மருந்து அடித்தாலும் மூட்டைப்பூச்சிகள் எல்லாம் திமிர் ஏறியிருப்பதால் சாவதில்லை. (சிரிப்பு).

### *Diarrhoea (North Arcot)*

* 1150 *Q.*— SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் வயிற்றுப்போக்கு (Diarrhoea) வியாதி அதிகமாய் பரவி வருவதைத் தடுக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை ?

(இ) இதுவரை எத்தனை பேர்கள் இறந்துவிட்டார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The range Health staff and the reserve Health staff posted to the affected area have undertaken disinfection, chlorination of water sources and treatment of patients by sulphaguanidine and pro-diarrhoea mixture. Cases requiring hospital treatment are removed to hospitals.

(*b*) Ninety-three.

SRI S. M. ANNAMALAI : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் தருகின்ற புள்ளி விவரங்களுக்கும் உண்மையில் அங்கே நடைபெறுகின்ற விவரங்களுக்கும் பெரிய வித்தியாசம் இருக்கிறது. அங்கு பல்லாயிரக் கணக்கில் மக்கள் செத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று மகஜர்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆரணி தாலூகாவில் மட்டும் 5,000 பேர்கள் இறந்து போயிருக்கிறார்கள் என்று அங்கிருந்து சுமார் 10 மகஜர்கள் வந்திருக்கின்றன. அதிகாரிகள் தங்கள் பொறுப்பிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக இவ்விதம் கொடுத்திருக்கலாம் என்று நினைக்கிறேன். இந்த நோய்க்கு முக்கியமான காரணம் கடலை எண்ணெய்தான் என்று